# கனவான்

"பழங்காலச் சிற்பங்கள் சின்னங்கள் ஏடுகள் இவை போன்றவை இங்குக் கிடைக்குமென்று கேள்விப்பட்டேன் என்று கூறிய புதியவரிடம், பழய சாமான் கடை பண்டரி, தன்னிடம் இருந்த சாமான்களைக் காட்டுவதற்கு முன்பு, இனிய புன்னகையைக் காட்டி, "பழங்காலச் சிற்பங்களைத் தேடிக் கொண்டு வருபவர்களின் தொகையே குறைந்து விட்டது இலக்கிய மேதைகள் வரலாறு அறிந்தவர்கள் தானே, அவைகளின் அருமையைத் தெரிந்து கொள்ள முடியும்; பாமரருக்குப் பளபளப்பும் மினுமினுப்பும் கொண்ட இந்தக் காலத்துச் சாமான்கள் மீதுதான் மோகம்" என்று கூறினான்.

"உண்மைதான் ஐயா! ஆனால், பழங்காலச் சிற்பம் சின்னம் என்று போலிகளைக் காட்டி ஏய்த்து விடுபவர்களும் இருக்கிறார்கள், அல்லவா!! ஒருசமயம் நானே ஏமாற்றப்பட்டிருக் கிறேன் கல்கத்தாவில். ஒரு அபூர்வமான வேலைப்பாடு கொண்ட குதிரைச்சவுக்கு இருந்தது. இந்தக் காலத்தில் பழக்கத்தில் உள்ளது அல்ல. நான் அதைக் கூர்மையாகக் கவனிப்பதைக் கண்ட கடைக்காரர் என்னிடம் மிக பக்குவமாகப் பேசி, அந்தக் குதிரைச் சவுக்கு தேசிங்கு ராஜாவினுடையது என்றான். பல ஆதாரங்கள் காட்டினான் – நான் மலைத்துப் போனேன் உண்மையிலேயே, தேசிங்கு ராஜாவினுடையதாக அந்தச் சவுக்கு, இருக்குமானால் ஆஹா! எவ்வளவு அபூர்வமான கண்டு பிடிப்பு. எத்தனை வரலாற்று ஆராய்ச்சிகளுக்கு உபயோகப்படும் என்றெல்லாம் எண்ணினேன்; அவ்விதம் எண்ண எண்ண என் ஆவல் அதிகரித்தது; கடைக்காரன் என்னைச் சரியாக மயக்கி விட்டான்; தேசிங்கு நடத்திய போரிலே நேரடியாக ஈடுபட்ட

நசுருதீன் அதை எடுத்து வந்ததாகவும், அந்தச் சவுக்கு, அவன் குடும்பத்தில் பலகாலம் இருந்ததாகவும், நசுருதீன் பேரன், அதை ஒரு அலகாபாத் அப்துல் சத்தாருக்கு விற்பனை செய்ய, சத்தாரிடமிருந்து அது நாகபுரிக்குச் சென்று, கடைசியில் மிகுந்த சிரமப்பட்டு தான் அதை வாங்கி வந்ததாகவும் கூறி, அதற்கான சில குறிப்புகளையும் காட்டினான். 500 ரூபாய் கொடுத்து விட்டேன். பிறகு, நான் ஒரு பெரிய ஆராய்ச்சியாளரிடம் பேசும் போது, தேசிங்கு குதிரைச் சவுக்கு உபயோகப்படுத்தும் வழக்கமே கிடையாது என்பதை நிரூபித்தார். எவ்வளவு ஏமாளியாகி விட்டேன் என்று வருத்தப்பட்டேன். பயன்? 'பணம் பாழாயிற்று' என்று, வந்தவர் சோகத்துடன் கூறினார். ''அநேகமாக அப்படித்தான்'' என்று கடைக்காரன் அவர் பேச்சை ஆமோதித்து விட்டு, அருணகிரியார், ஆர்ச்சிபால்டு துரை, புரபுசர் இபுராகீம், வஸ்தாது வாலிகான் போன்ற பல பிரபல ஆராய்ச்சியாளர்கள் தந்த நற்சாட்சிப் பத்திரங்களைக் காட்டிவிட்டு, எந்தப் பொருளை வேண்டுமானாலும் தகுந்த ஆராய்ச்சிக்குப் பிறகு வாங்கிக் கொள்ளுங்கள். நானாக வலியுறுத்தப் போவதில்லை என்று உறுதி அளித்தான்.

வந்தவர், பல பொருள்களைப் பார்த்துக் கொண்டே இருந்தார்.

ஏதோ கணக்கு எழுதிக் கொண்டிருந்த கடைக்காரர் சிறிது நேரத்துக்குப் பிறகு, ''நானாக எதையும் தங்களுக்குக் காட்டக் கூடாது என்றுதான் தீர்மானமாக இருந்தேன், என்றாலும் இவ்வளவு நல்லவருக்குக் காட்டாமல் இருக்க என் மனம் இடம் தரவில்லை. நீங்கள் விலை கேட்க வேண்டாம். பார்த்து மகிழ்ந்தால் போதும் இதோ" என்று கூறியபடி, ஒரு பேழையைத் திறந்து, அதற்குள்ளிருந்து ஒரு 'கழல்' எடுத்துக் காட்டினான்.

தங்கமல்ல! வெள்ளிகூட அல்ல!. . . ஆனால், தங்கமும் வெள்ளியும் கிடைக்கக்கூடும் இந்தக் கழல்'. . . கிடைக்கும் பொருள் அல்ல. . . இது கட்டபொம்மன் அணிந்திருந்த வீரக் கழல்!! கும்பெனிக் கொடியவர்கள் என் உயிரை வேண்டுமானால் பறித்துக் கொள்ளட்டும், ஆனால், என் மக்கள் எனக்களித்த இந்த வீரக் கழலை மட்டும் அந்த நீசர்கள் கையில் சிக்கவிடமாட்டேன், என்று வீராவேசமாகப் பேசி; வெட்டாக் குளத்தில் வீசி எறிந்து விட்டார்; குளத்திலே பலகாலம் கழல் கிடந்திருக்கிறது, பிறகு குளம் வரண்டுபோய், மண்மேடு ஆகிவிட்டது. இப்போது, முப்பது

வருஷத்துக்கு முன்பு சேவலூர் சாந்தியப்பன், அந்த இடத்தை வாங்கினான், மாளிகை கட்ட! அதற்காகத் தோண்டும் வேலை நடந்தபோது, இந்தக் 'கழல்' ஒரு சிற்றாளிடம் கிடைத்தது; அவன் அதை ஒரு கள்ளுக்கடையில் கொடுத்துவிட்டான். அந்தக் கடைக்காரன் வீட்டிலேதான் எனக்குப் பெண் கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது இப்போது என்னிடம் இது கிடைத்தது எனக்குக் கட்டபொம்மன் கழல் பற்றி சட்டிச்சாமியார் சொல்லித் தெரியும். அவருடைய குருநாதர் பிட்டுக்கு மண் சுமந்த பெரிய 'கவிவாணர்'. அவர் ''கழலிடம் கழலுவேன் என்றோர் அருமையான அகவல் தீட்டியிருந்தார் இதோ பாருங்கள், இதுதான் அந்த அகவல்'' என்று கூறி ஒரு ஏட்டுச் சுவடியைக் கொடுத்தான்.

வந்தவர், மிகுந்த அக்கறையுடன், ஏட்டுச் சுவடியைப் படித்தார்; ரசித்தார்.

கழலை, பழையபடி பேழையில் வைத்துவிட்டான், பண்டரி.வேறு சில சாமான்களைப் பார்த்துக் கொண்டே வந்தவர், ஒரு பழைய பிடில் கண்டார். கையில் எடுத்தார், இப்படியும் அப்படியும் திருப்பித் திருப்பிப் பார்த்தார். பண்டேரி சிரித்துக் கொண்டே, ''இது பழங்கால அபூர்வப் பொருள் அல்ல; இப்போது எங்கும் கிடைக்கும் பிடில்தான். ஆனால், இந்த வாத்தியம், ஒரு பெரிய குரு எனக்கு'' என்றான்.

வந்தவர், ''அது என்னப்பா, பிடில் உனக்குக் குரு என்கிறாயே'' என்று கேட்டார்.

''அது கிடக்கட்டும் இது என்ன விலை பெறும் சொல்லும் பார்ப்போம்'' என்று கடைக்காரன் கேட்டான்.

வந்தவர், சிரித்துக் கொண்டே, ''இது மிகச் சாதாரணமான பிடில்; பழசுகூட. . . பதினைந்து இருபது ரூபாய் தரலாம். . .'' என்றார்.

''அருமை! அருமை! அப்படியே சொல்லிவிட்டீரே. . .. முன்னூறு ரூபாய் கொடுத்தேன், இதற்கு என்பது எப்படி உமக்குத் தெரிந்தது'' என்று கடைக்காரர் கேட்டார்.

''யாரய்யா 300 சொன்னா, பதினைந்து அல்லது இருபது ரூபாய் தரலாம் என்று சொன்னேன். . .'' என்று வந்தவர் விளக்கம் தந்தார்.

''அப்படியா? நான், பதினைந்து இருபது என்று பெருக்கல் கணக்கில் கூறுவதாக எண்ணிக்கொண்டேன் நீங்களாவது 

ரூபாய் தரலாம் என்கிறீர்கள். நான் 10 ரூபாய்க்கு மேல் ஒரு பைசா கூடத் தரமாட்டேன். ஆனால், இதற்கு நான் கொடுத்தது 300 என்னை அவ்வளவு 'முட்டாள்' ஆக்கிவிட்டது. இந்தப் பிடில், கேளுங்கள் என் ஏமாளித்தனத்தை.

என் கடைக்கு எதிரில் ஒருநாள் மாலை, ஒரு பிச்சைக்காரச் சிறுமி, பத்து வயது இருக்கும் இந்தச் சனியனை இழுத்தபடி ஏதோ பாடிக் கொண்டிருந்தாள். ஒருவரும் காசு போடவில்லை. அந்தச் சிறுமி, நெடுநேரம் பார்த்து விட்டு கடைக்குள் நுழைந்தாள். . . "நுழைந்து, பிடிலை, விலைக்கு விற்று விட்டாளா?"

"300 ரூபாய் கொடுத்தா வாங்குவேன். . . சொல்கிறேன் கேளும். அந்தச் சிறுமியின் முகம், என்னை உருக்கி விட்டது கண்களிலே நீர் "ஐயா! தர்மப்பிரபு! என்று கூறிக் கொண்டே என் காலில் விழுந்தாள். . . நான் வழக்கப்படி, ச்சீ! கழுதே! காலை விடு! எட்டிப் போ! வெளியே போ! என்றெல்லாம் சொன்னேன். அந்தப் பெண், விடவில்லை, ஐயா! ஒரு ஐந்து ரூபா கொடுங்கள் ஐயா! பிச்சை அல்ல அய்யா! கடனாகக் கொடு!... என் தாயார் ஆபத்தான நிலையிலே இருக்கிறாள் ஐயா! மருந்து வாங்கப் பணம் வேணும்! மார்க்கட்டிலே பாடினேன், இரண்டே காலணா கிடைத்தது, சினிமா கொட்டகையிலே இரண்டு சாக்லேட் தான் போட்டார்கள், இங்கே நீங்களே பார்த்தீர்கள்... ஒரு காசும் கிடைக்கவில்லை. . . இருட்டுவதற்குள்ளே எங்கம்மாவுக்கு மருந்து வாங்கியாகணும். . . இல்லையானா ஐயோ! நினைத்தாலே பயமாயிருக்கையா ஐஞ்சு ரூபாயை, நான் தினம் தினம் கொஞ்சம் கொஞ்சமாக கொடுத்து விடறேன். . . நாளைக்குச் சந்தை! அங்கேயே ஒண்ணோ ரெண்டோ கிடைக்கும். . . நான் நல்லாப் பாடுவேன். . . ஆடுவேன். . . ஐயா! ஒரு அஞ்சு ரூபா. . .!" என்று கேட்டாள். எனக்கு சிரிப்புத்தான் வந்தது, ஒரு பிச்சைக்காரப் பெண், அஞ்சு ரூபா கடன் கேட்கறதுன்னா, சிரிப்பு வராமலா இருக்கும். . ."

"அதிலும் பத்து வயசுப் பொண்ணு!"

"ஆமாங்க. . . சிறுசு. . . தா! கழுதே! ஓடிப்போன்னு மிரட்டினேன். . . அந்தப் பெண், இந்தப் பிடிலைக் காட்டி, ஐயா! என்னை நம்பிக் கடன் கொடுக்காவிட்டாலும், இதோ இந்தப் பிடிலை, வைச்சுக் கிட்டு கொடுங்கள் தோ பாருங்க முப்பது ரூபா இது விலை, நாங்க வாங்கரப்போ. . . இது என் பிழைப்புக்குத் தேவையானது. . . கஞ்சி தண்ணி கிடைக்கிறது, இதாலேதான். . .

எங்கம்மாவைக் காப்பாத்த நான் கண்ணைப் பெயர்த்துக் கொடுக்கறது போல, இதைக் கொடுக்கறேன். . . நான் அஞ்சி ரூபாயைத் திருப்பிக் கொடுத்ததும் இதைத் திருப்பிக் கொடுங்க என்று சொன்னாள்.

''பரவாயில்லையே. . . நியாயமான பேச்சுதான், அந்தக் குட்டி சொன்னது.''

''நியாயமோ இல்லையோ, எனக்கு அந்தப் பெண்ணுக்குத் தன் தாயாரிடம் எவ்வளவு அன்பு இருக்கிறது என்று எண்ணின போது, ஐந்தென்ன, பத்துகூடத் தரத்தான் வேணும்னு தோன்றி விட்டது. சரி என்று ஐந்து ரூபாய் கடன் கொடுத்தேன்.''

''பிடில். . . .?''

''நான் பரவாயில்லைன்னு சொல்லியும் கேட்காமல், பிடிலை அந்தப் பெண், கடனுக்கு ஈடாக என்னிடம் கொடுத்து விட்டுப் போனாள். . .''

''முன்னூறு கொடுத்தேன், என்றீரே''

''முழுவதும் கேட்டால்தானே தெரியும். . .''

இது நடந்து, நாள் நாலு, ஐந்து, ஆறுகூட ஆகி விட்டது. பெண் வரவில்லை. . . சரி ஐந்து ரூபாய் போனது போலத்தான் என்று நான் எண்ணிக் கொண்டேன். . . ஏழாவது நாள் ஒருவர், பிரபு, மேதை போலத்தான் இருந்தார், என் கடைக்கு வந்தார், இப்போது நீங்கள் பார்ப்பது போலத்தான் பல சாமான்களைப் பார்த்துக் கொண்டே வந்தவர், இந்தப் 'பிடி'லைக் கண்டதும், திடுக்கிட்டுப் போனார். அவர் இதை எடுத்தபோது, உண்மை யிலேயே அவருடைய கரம் நடுங்கிற்று, நானே பார்த்தேன். மிகவும் சோகமான குரலில் அவர்.

''ஐயா! இந்தப் பிடில் கிடைக்குமென்று நான் கனவு கூடக் காண முடியாதிருந்தது. . . எத்தனையோ நகரங்களில் தேடித் தேடி அலுத்துப் போனேன். . . கடைசியில் கடவுள் கண் திறந்தார். . . இங்கே கண்டேன். . .'' என்று கூறும்போது, அவருடைய கண்களில் நீர் ததும்பிற்று. நான் திகைத்துப் போனேன்.

அவர் அந்தப் 'பிடிலை' வாசிக்கத் தொடங்கினார். இனிமையாகவே இருந்தது. கடை, அதிலிருந்து சாமான்கள், நான், எதுவும் அவர் கண்களுக்குத் தெரியாதது போன்ற நிலையில் காணப்பட்டார்.

''ஐயா! இது என்ன அபூர்வம் வாய்ந்தது?'' என்று நான் அவரைக் கேட்டேன். அவர் சிரித்தார். சிரித்து விட்டு, கடைக் காரர்களல்லவா, தங்களிடம் உள்ள பொருளின் அருமைப்பற்றிக் கூறுவார்கள். நீர் என்னைக் கேட்கிறீரே, என்றார்; நான் சிறிது வெட்கப்பட்டேன்.

''பரவாயில்லை; கோஹர்ஜான் தெரியுமா உனக்கு''

''கேள்விதான். . . இந்துஸ்தானி பாடகி. . . பிரபல மானவளாம். . .''

''. . .ளாம்! . . .ளாம்! பைத்யக்காரரய்யா நீர். பிரபலமான பாடகி, அவள் ஒருவள்தான் கோஹர்ஜான் பாட்டு கேட்டால், கொலைக்காரன்கூட சாது ஆகிவிடுவான் பாம்பு படமெடுத்தாடும் அந்த இனிமை, அந்த இசை. அந்தச் சொல்வளம், இனி ஒருவருக்கு வருமா; தவமிருந்தாலும் வராது. கோஹர்ஜான் புகழ் எந்த அளவிற்குப் பரவிற்று தெரியுமா. . . கோஹர்ஜான் புடவை, கோஹர்ஜான் வளையல், கோஹர்ஜான் பாஷன் என்று நாடே புகழ்ந்ததய்யா. . . அப்படிப்பட்ட கோஹர்ஜானுடைய சங்கீதக் கச்சேரியில் உபயோகமாகிக் கொண்டிருந்த 'பிடில்' இது. . . என் தகப்பானாருடையது. . . அவர் 'வித்வான்' தொழில் செய்தரவரல்ல. . . வீரபுரியில் பெரிய வியாபாரி. கோஹரிடம் அவருக்கு ஏற்பட்ட 'காதல்' அவரை பிடில் வித்வானாக்கிற்று பராரியுமாக்கிற்று. . . பித்தனாகவுமாக்கி விட்டது குடும்பத்தை விட்டு எங்கெங்கோ அலைந்தார். . . பஞ்சையாகவே மாண்டு போனார். . . நான் என் மாமன் உதவியால் படித்து முன்னேறி, வியாபாரம் நடத்தி செல்வனானேன். பணம் சேர்ந்த பிறகு, நான் என் தகப்பனாரிடம் இருந்த இந்தப் பிடில். எங்கே இருக்கும் என்று தேடித் தேடி அலைந்ததில்மட்டும் எனக்கு இரண்டாயிரம் செலவாகி இருக்கும். கடைசியில் இங்கே காண்கிறேன். என் தகப்பனாரின் கரத்தில் தவழ்ந்த இந்தப் பிடிலை, கோஹர்ஜான் பாராட்டிய பிடிலை, ஆயிரம் மேடைகளிலே ஆனந்தம் அளித்த அற்புதமான பிடிலை. . . ஐயா இதற்கு என்ன விலை வேண்டு மானாலும் கேளுங்கள், கொடுக்கச் சித்தமாக இருக்கிறேன் என்றார்.''

யார்? உமக்கு முன்பின் தெரியாதவர். . .

''ஆமாம், ஆனால், அவர் இந்தப் பிடிலை, மார்போடு அணைத்துக் கொண்டதையும், கண்களில் ஒத்திக் கொண்டதையும் நீங்கள் பார்த்திருந்தால் அல்லவா தெரியும்.''

''சரி, பிறகு என்ன நடந்தது?''

''என்ன செய்வேன்! ஆயிரம் ரூபாய் என்று அடாவடியாகச் சொன்னாலும் அந்த ஆசாமி கொடுத்துவிடத் தயாராக இருந்தது தெரிந்தது. ஆனால், எப்படிக் கொடுப்பது? நாளைக்கே ஐந்து ரூபாய் கொடுத்துவிட்டு, அந்தப் பெண் 'பிடிலைக்' கேட்டால் என்ன சொல்வது? சும்மா விடமாட்டாளே, பிச்சைக்காரி. தெருவில் கும்பலல்லவா சேர்ந்துவிடும், பிறகு என் மதிப்பு, என் கடையின் மதிப்பு என்ன ஆவது. சங்கடம்; சிக்கல். அந்த ஆசாமியோ, நூறு ரூபாயிலிருந்து துவக்கி, ஆயிரம் வந்து நின்றார். நான் சொன்னேன், ஐயா இது என்னுடையது அல்ல; வேறு ஒருவருடையது. நான் அவர்களைக் கேட்காமல் இதை விற்பது நியாயமல்ல. நீங்கள் அடுத்த வெள்ளிக்கிழமை வாருங்கள்; அதற்குள் நான் 'பிடில்' சொந்தக்காரரிடம் சொல்லி ஏற்பாடு செய்து வைக்கிறேன். . . ஆயிரம் சம்மதம்தானே, என்று கேட்டேன்! என் தகப்பனார் எனக்கு தரும் ஒரே ஆஸ்தி ஐயா இது! ஆயிரம் என்ன, மேலும் கேட்டாலும் தருவேன். எப்படியும் எனக்கு இதைத் தாங்கள் வாங்கித் தரவேண்டும். . . தங்களுடைய உதவியை நான் என்றென்றும் மறக்க மாட்டேன். . . எப்படியும் வாங்கித் தருவதாக 'சத்யம்' செய்து தந்தால்தான் என் மனம் நிம்மதி அடையும் என்றார்; சரி என்றேன்; அடுத்த வெள்ளி வருவதாகச் சொல்லி விடைபெற்றுச் சென்றார்.

மறுநாள் அந்தப் பிச்சைக்காரி 5 ரூபாயுடன் வந்து சேர்ந்தாள்! ஐயா உங்கள் புண்ணியத்திலே என் அம்மா பிழைத்துக் கொண்டாள். சந்தையிலும் எனக்கு நிறைய வருமானம் கிடைத்தது. இதோ பணம் பிடிலைக் கொடுத்துவிடுமய்யா. . .''. என்றாள். சீமான்களெல்லாம் வாக்குத்தவறும் இந்தக் காலத்தில், கேவலம் ஒரு பிச்சைக்காரப் பெண், சொன்ன சொல்லின்படி நடந்தது எனக்கு ஆச்சரியமாகத்தான் இருந்தது. . . நீ நல்ல பெண்ணம்மா! ஆண்டவன் உனக்கு நன்மை செய்வார். இப்போது உனக்கு ஒரு அதிர்ஷ்டம் அடிக்கப் போகிறது. இந்தப் பிடிலை, நூறு ரூபாய் விலைக்கு ஒருவரிடம் பேசி வைத்திருக்கிறேன் பணம் தருகிறேன் அதை வைத்துக் கொண்டு, நீயும் உன் தாயாரும் ஏதாவது சிறிய தொழில் செய்யலாம் என்றேன். அந்தப்பெண் ஆனந்தப்பட்டு என் காலில் விழுவாள் என்று நான் நினைத்துக் கொண்டேன். ஆனால் அந்தப் பெண்ணோ, ஐயயோ! அது மட்டும் வேண்டாம். . . இந்தப் பிடில்

தான் எங்களுக்கு 'சோறு' போடுவது, பகலெல்லாம் என் கையிலிருக்கும், இரவெல்லாம் என் 'தலைமாட்டில்' இருக்கும். இதை இழக்க என் மனம் துளியும் சம்மதிக்காது. . . என் தாயாரும் ஒப்புக் கொள்ளவேமாட்டாள் என்றாள் என்ன செய்வது! அந்த ஆசாமியோ ஆயிரம் தரச் சம்மதிக்கிறான்; மறுபடியும் வற்புறுத்தினேன். தன் தாயாரையழைத்து வந்தாள் அவளிடம் அன்பாகப் பேசினேன் கடைசியில் 300 ரூபாய்க்குச் சம்மதிக்கச் செய்து, எதற்கும் நல்லது என்று, ஒரு விற்பனைச் சீட்டு எழுதி, கையெழுத்துப் போடச் சொன்னேன் தட்டுத் தடுமாறிக் கொண்டு தில்லை என்று போட்டாள்! பணத்தை எடுத்துக் கொண்டு சென்றாள் சோகமாகத்தான்!

700 இலாபம், என்பதை எண்ணி எண்ணி நான் பூரித்துப் போனேன்!

செவ்வாய் ஓடிற்று புதன் நகர்ந்தது வியாழனை ஓட்டினேன் வெள்ளிக்கிழமை. பிடிலை நன்றாகத் துடைத்து வைத்து விட்டு, காத்துக் கொண்டிருந்தேன். ஆசாமியை ஆயிரத்தோடு விடுவதா, மேலும் பத்தோ இருபதோ கறப்பதா என்று வேறு யோசனை.

பேராசை! வெள்ளிக்கிழமை, இந்த நினைப்பிலேயே மூழ்கியதால், கடை வியாபாரத்தைக் கூடக் கவனிக்கவில்லை. மனம் எதிலும் செல்லவில்லை. மணி பத்துதானே, இன்னும் ஒரு மணி நேரம் கழித்துத்தான் வருவார், என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன், மணி இரண்டாயிற்று, என்ன இன்னும் வரக் காணோமே என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். மூன்று, நான்கு, ஆறு, எட்டு! கடை மூடவேண்டிய நேரம் ஆசாமி வரவேயில்லை!!

அடுத்த வெள்ளி. . . அதற்கு அடுத்த வெள்ளி. . . நாலு வெள்ளி சென்று விட்டது. ஆசாமி வரவேயில்லை! 700 இலாபம் கிடைக்குமென்ற பேராசை! பிச்சைக்காரியை ஏய்த்து, பெரும் இலாபம் சம்பாதிக்க நினைத்தேன், எனக்குப் பட்டை நாமம் சாத்தப்பட்டது. பிச்சைக்காரப் பெண்ணைத் தேடித் தேடிப் பார்த்தேன் கிடைக்கவில்லை.

பேராசை பெருநஷ்டம் என்ற அரிய பாடத்தை எனக்கு அருமையாகக் கற்றுக் கொடுத்த குருநாதன் என்று இந்தப் 'பிடிலை' நான் தினம் தினம் கும்பிட்டு வருகிறேன்'' என்று, கடைக்காரன்தான் ஏமாந்த விவரத்தைக் கூறினான்.

வந்தவர் சிரித்துவிட்டு, பைத்யக்காரத்தனம்! அந்த பிச்சைக்காரப் பெண்ணும் சீமான் வேடத்தில் வந்த எத்தனும் உன்னிடம் பறித்த பணத்தை வைத்துக் கொண்டு, எங்கே இந்நேரம், விருந்து சாப்பிடுகிறார்களோ! என்று கேலி பேசினான்.

''என்ன செய்வதய்யா'' நான் கள்ளம் கபடம் அறியாதவன் யார் எதைச் சொன்னாலும், அதுபொய் என்று எனக்குத் தெரியா முன்னம், உண்மை என்று நம்பி வீடுகிறேன்'' என்றான்.

ஆமாம்! அதுபோலத்தான் கட்டமொம்மன் கழல் விஷயத்திலும் ஏமாந்து போயிருக்கிறீர் இது கட்டபொம்ம னுடையதுமல்ல, கழலுமல்ல! இது சிலம்பு! மாரி கோயில் பூஜாரிகளிடம் இருப்பது! இதை யாரோ, உன் தலையிலே கட்டி விட்டார்கள்! ஏட்டுப் பிரதி வேறு, காட்டுகிறீர்! எவ்வளவு கொடுத்து விட்டீரோ; ஏமாளியாகி விட்டிருப்பீர் என்று அவர் கூறினார்.

''இப்படித்தான் ஐயா பலர் ஏமாளியாகிறார்கள், சிலர் எப்போதும் சர்வ ஜாக்ரதையாக இருப்பார்கள்'' என்று கடைக்காரன் கூறிவிட்டு, இவரிடம் வியாபாரம் ஏதும் செய்ய முடியாது என்று தீர்மானித்துக் கொண்டான்.

''எதற்கும் அந்தப் 'பிடிலை' வாங்கினதில் உனக்கு ஏற்பட்ட நஷ்டத்தை நானும் பங்கு போட்டுக் கொள்கிறேன். ஏதாவது ஒரு விலை சொல்லிக் கொடுமய்யா'' என்று அவர் கேட்டார்; கடைக்காரன் திகைத்துப் போனான்.

''உங்களுக்கு எதற்காக வீண் நஷ்டம்? நான் ஏமாளி, அதன் பலனை நான் அனுபவித்துக் கொள்ள வேண்டியதுதான் முறை'' என்று கடைக்காரன் கூற, ''அது சரிதான், எனினும் எனக்கு இந்தப் பிடில் கச்சிதமானதாகத் தெரிகிறது. ஆகையால், ஐம்பது ரூபாய் கொடுக்கிறேன். . .'' என்று பேரம் பேசலானார். ''நான் கொடுத்தது 300. . .'' என்று வியாபாரி தன் தொழிலைத் துவக்கினான். ''கொடுத்தது என்று கூறாதீர். . . ஏமாந்து கொடுத்தது என்று சொல்லும்'' நான் இதற்கு ஐம்பதுதான் தரமுடியும். . . வேண்டுமானால், உம்முடைய கட்டபொம்மன் கதையையும் நம்பித் தொலைக்கிறேன், அந்தக் கழலையும் சேர்த்து நூறு ரூபாய். . . சம்மதமா?'' என்று கேட்டார் வந்தவர், கடைக்காரருக்குப் பலத்த சந்தேகம் வந்துவிட்டது. ஒருவேளை, உண்மையிலேயே, பிடில் கோஹர்ஜான் கச்சேரிக்கு உபயோகப்பட்டதுதானோ? என்று யோசிக்கலானார். செச்சே! இருக்காது. இந்தக் 'கழல்' கட்ட

பொம்மனுடையது என்பதை இவர் நம்பி விட்டாரே, அது போலத்தான் இதுவும். இதைத்தான் நாம் குதிரை வண்டி குப்புசாமியிடம் பதினாலணாவுக்கு வாங்கினோமே! என்று தனக்குள் கூறிக் கொண்டு, கழலையும் பிடிலையும், நூறு ரூபாய்க்கு விற்று விட்டான். கனவான், இரண்டையும் எடுத்துக் கொண்டு போக, வெளியே கிளம்பினார். ''பைத்தியக்காரன்!'' என்று மனதுக்குள்ளாகவே கடைக்காரன் கேலி செய்தான்.

தில்லையும் அவள் மகளும் சுடச் சுட இட்டிலி தோசை சுட்டு விற்றுக் கொண்டிருந்தார்கள் பக்கத்து ஊரில்.

சுருள் மீசை சுந்தரம், தன் நண்பனிடம் சமர்த்தைச் சொல்லிக் கொண்டிருந்தான்.

''தெரியுமாடா! கோஹர்ஜான் பிடில் என்று ஒரு 'டூப்' விட்டேன்; கடைக்காரன் நம்பி விட்டான்; பிறகு நம்ம பொடிசை அனுப்பினேன். தில்லையும் போனாள்; 3 நூறு தட்டிக் கொண்டு வந்தோம் என்றான்.

''பைத்தியக்காரன்!'' என்று அவன் கடைக்காரனைக் கேலி செய்தான்.

''பைத்தியக்காரன்!'' என்று கடைக்காரனைக் கேலி பேசியபடி, கழலை உடைத்து அதற்குள்ளே பதுக்கி வைக்கப் பட்டிருந்த வைரக் கற்களை எடுத்து மகிழ்ந்தான் கனவான்.

அவனுடைய மனம் இரண்டாண்டுகளுக்கு முன்பு நடைபெற்ற சம்பவத்திற்குச் சென்றது.

புதுவையிலிருந்து 'முத்துமாரி' ஊர்வலம், கிளம்பி, தடபுடலாக வந்து கொண்டிருந்தது. மாரியம்மை திருவிழாவைவிட, இது கனஜோராக இருக்கவேண்டுமென்று 'இந்து' தலைவர்கள் திட்டமிட்டனர். எனவே திருவிழா கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

''முத்துமாரி'' புதுவையிலிருந்து புறப்பாடாகி, 'இந்தியா' எல்லையில் உள்ள இலுப்பைத் தோப்பிலே, 'வனபோஜனம்' செய்வதற்கான, தனி அனுமதியை 'இந்து' பணக்காரர்கள், கவர்னரிடம் பெற்றிருந்தனர். எதிலே குறுக்கிட்டாலும் பரவாயில்லை, எதற்குத் தடை விதித்தாலும் சங்கடமில்லை ஆனால் மத சம்பந்தமான காரியத்துக்கு மட்டும் தடை விதிப்பது மகா ஆபத்து என்பது 'துரை'மார்களுக்குத் தெரியும்; ஆகவே, தனி அனுமதி கொடுத்தார்.

'முத்துமாரி'யை வர்ணித்துக் கொண்டு பூஜாரிகள் சிலம்பம் போட்டுக் கொண்டு வந்தனர். எல்லையை நெருங்கிக் கொண்டிருந்தது ஊர்வலம் வழி நெடுக பக்தர்கள் தீபாராதனை செய்ததால், தாமதம்.

சுங்க இலாகா அதிகாரிகளுக்குக் கிடைத்த தகவல் அவர்களைத் திடுக்கிட வைத்தது. விலையுயர்ந்த வைரங்களைக் கள்ளத்தனமாகக் கொண்டு போய்விட, முத்துமாரி பண்டிகையைச் சில பக்காப் பேர்வழிகள் பயன்படுத்துகிறார்கள் என்பது அவர்களுக்குக் கிடைத்த தகவல் என்ன செய்வது?

மாரியம்மன் ஊர்வலத்தைத் தடுத்து நிறுத்தி சகலரையும் சோதனை போடவேண்டும் – மாரியம்மன் சிலையைக்கூட! செய்வதா? செய்தால் விஷயமறியாத மக்கள் வெகுண்டோடு முன்னால் இரத்தக் களரியாகி விடக் கூடுமே, என்ன செய்வது? இது அவர்களின் திகில், மத சம்பந்தமான விஷயத்தில் குறுக்கிடுவது ஆபத்து என்பதும் அவர்கள் அறியாததல்ல.

''அதைப் பார்த்தால், அயோக்கியர்கள் தப்பித்துக் கொள்வார்கள், அதற்கென்ன செய்வது?'' என்று கேட்கிறார் ஒரு அதிகாரி.

''அதற்காக, மாரி திருவிழாவில் நாம் சோதனை நடத்தினால், மக்கள் சீறுவார்களே. கல்லால் அடிப்பார்கள் கலகம் கிளம்பும். பிறகு நாம் துப்பாக்கி தூக்க வேண்டும் மறுநாள் பத்திரிகைகளில், புதுவை எல்லையில் தொல்லை மாரி திருவிழாவுக்குத் தடை என்றெல்லாம் தலைப்புகள் வெளியிடுவார்கள். வீணான அபவாதம்'' என்றார் மற்றோர் அதிகாரி.

''மகா பாபம் கூடத்தான் சார்! இந்த முத்துமாரி மகா சக்தி வாய்ந்த தெய்வம் பாவம் செய்பவர்கள், மூக்கிலும் வாயிலும் இரத்தம் கக்கி சாவார்களாம்'' என்று திகிலுடன் பேசினார் இன்னொருவர்.

''இந்தக் காலத்திலே, யார் சார்! இப்படிப்பட்ட கட்டு கதைகளை நம்புவார்கள்'' என்று வேறோர் அதிகாரி பேசினார், தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, பெரிய அதிகாரி, ''சோதனையிடுவது அவ்வளவு சரியாகாது தகுந்த ஆதாரம் கிடைத்தாக வேண்டும்'' என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்.

துணிந்த பேர்வழியாகத் தென்பட்டவர், ''சார்! நான் மாறு வேடமிட்டுக் கொண்டு மாரி திருவிழா ஊர்வலத்தில் சென்று துப்பு

அறிகிறேன். நீங்கள் நாலு பேர், சாதாரண உடையில் வாருங்கள். துப்புக் கிடைத்ததும் தெரிவிக்கிறேன். கள்ளனைக் கையும் பிடியுமாகப் பிடித்திட ஏற்பாடு செய்கிறேன்'' என்று கூறினார். அது போலவே, அவர் 'பூஜாரி'யாகி, மிக அற்புதமாகப் பாடி, 'சிலம்பு' போட்டார். அவருடன் போட்டியிடுபவர்போல் மிகத் திறமையாக மற்றோர் பூஜாரி 'சிலம்பு' போட்டார். அந்த இரு பூஜாரிகளின் 'போட்டா போட்டி' ஆட்டத்தை மற்றப் பூஜாரிகள் வெகுவாக இரசித்தனர்.

வாங்கி வைச்ச, வைரம் எங்கே?

வாயை விட்டுச் சொல்லிடம்மா வகையான படையல் தாரேன் முத்துமாரியம்மா!

இல்லையானா, வளையம் போட்டு இழுத்துப் போவேன், சொன்னேன் மாரியம்மா!

என்று பூஜாரி வேடமிட்ட அதிகாரி சொல்லிப்பார்த்தார்; போட்டியிட்ட பூஜாரியோ, அதைக் கவனிக்கவில்லை; ஆவேசம் வந்தவன் போல, ஆடினான், பாடினான்.

அந்தப் பூஜாரிதான், இந்தக் கனவான்!

அவன் கைச் சிலம்பிலேதான் வைரம்.

பூசாரி வேடமிட்டு, துப்பு அறிய வந்த அதிகாரியின் சந்தேகம் முழுவதும் 'கரகம்' ஆடியவன் மீது சென்றது. அவன் வாய்விட்டுப் பாடவும் செய்தான்.

வைரமடி, வைரம்;

வகையான வைரம்,

வாங்கி வைத்தா கோடி கோடி

இலாபம் தரும் வைரம்!!

இந்தப் பாட்டைக் கேட்டதும், துப்பறிய வந்தவருக்கு, சந்தேகம் பலமாகிவிட்டது. உடனே 'பூஜாரி' வேலையை நிறுத்திக் கொண்டான், கூவினான், அதிகாரிகள் சூழ்ந்து கொண்டனர். சோதனை ஆரம்பமாகி விட்டது, மக்கள் சபிக்கத் தொடங்கினர்.

அதிகாரியுடன் போட்டியிட்ட 'பூஜாரி' அப்போதுதான், தன் கைச்சிலம்பை, பக்கத்திலிருந்து இன்னொரு பூஜாரியிடம் கொடுத்தான். அவனும் காரணம் கேட்காமல் அதை வாங்கிக் கொண்டான், மீண்டும் அதைத் தன்னிடம் தரச் சொன்னான்: மீண்டும் அவனிடம் தந்தார்; இப்படி 'சிலம்பு' மாற்றும் விளையாட்டு நடந்து கொண்டிருந்தது.

அந்தப் 'பூஜாரி' சோதனை போடுவது தெரிந்ததும் நடுநடுங்கிப் போனான். காரணம், அவன் மடியில் ஒரு சிறு பொட்டலம் அபின்.

மெள்ள நழுவினான்.

சோதனை போடுவதால் சீற்றமடைந்த மக்கள் குழப்பம் விளைவித்தனர், அதனால் அவன் மெள்ள நழுவ முடிந்தது.

தன் 'சிலம்பு' அவனிடம் சிக்கியதால் அவனை விடாமல் துரத்தலானான். அதிகாரியிடம் போட்டியிட்ட பூஜாரி. பிடிபட்டான்; மடியில் எலுமிச்சமளவு தங்கமிருந்தது. வைரம் யாரிடமும் இல்லை! பிடிபட்டவன், அதிகாரியைத் தாக்கிவிட்டு ஓட எத்தனித்தான். எனவே 'ஓராண்டு' கடினக்காவல் கிடைத்தது. சிறையிலே அவனுக்கு. வெட்கமாகவும் இருந்தது, வேதனையாகவும் இருந்தது, எவ்வளவோ சிரமப்பட்டு, 'வைரம்' எடுத்துவர, பகல் வேடம் போட்டுக்கூடப் பார்த்தோம் கடைசியில் அது வேறொருவன் கையிலல்லவா போய்விட்டது, இப்படி ஏமாந்து போனோமே, என்று எண்ணி வேதனைப்பட்டான்.

''அண்ணேன்! இங்கேயா வந்துவிட்டே?'' என்று கேட்டான், புதிதாகக் கொட்டடிக்கு வந்தவன்.

''அடப்பாவி, நீயா?'' என்று கேட்டான் பழைய ஆள்.

''பூஜாரி வேலைக்கு இதுதானா பலன் கிடைச்சுது.''

''அண்ணேன்! உன்னை நான் நிஜமாகவே பூஜாரி என்று எண்ணிக் கொண்டேன். தங்கமல்ல, கடத்திக் கொண்டு வந்தயாம், நீ பேப்பர்க்காரன் போட்டிருந்தானாமே'' என்று விசாரித்தான் புதியவன்.

''அதெல்லாம் கிடக்கட்டும், சிலம்பு உன்னிடம் கை மாறி வந்து விட்டதே. அதை என்னடா செய்தே? வீட்டிலே இருக்கா ஜாக்ரதையா?'' என்று விசாரித்தான் அவன்.

''என் கஷ்டத்துக்கு அது ஒரு நாள் உபயோகப்பட்டுது. பழைய சாமான் கடை பண்டரிக்கு விற்று விட்டேன்'' என்று புதியவன் சொன்னபோது, அவன் மூர்ச்சையானான் பிறகு தெளிந்தெழுந்து, பண்டரி கடை பற்றிய சேதிகளைக் கேட்டறிந்து கொண்டான்.

அவன்தான் பிறகு 'கனவான்' வேடமிட்டு, கடை சென்றான்.

அவனிடம் சிறிது இலாபம் தட்டலாம் என்று, சிலம்பைக் காட்டி, இது கட்டபொம்மன் கழல் என்று கூறிக் கயிறு திரித்தான் பண்டரி. கனவானாகவே நடித்து, 'கழலை' வாங்கினான் கள்ளன், உடைத்தெடுத்தான்.' அவ்வளவும் அருமையான வைரம்.

பரவாயில்லை, பட்டபாடு வீணாகவில்லை. பண்டரியிடம் கனகச்சிதமாக நடித்ததால், அவன் துளியும் சந்தேகப்படவில்லை, என்றெண்ணி மகிழ்ந்தான் கள்ளன்.

திருட்டுச் சாமான்களை வாங்கும் திரிபுரதாஸ் கடைக்குச் சென்றான். வைரங்களைக் காட்டினான்.

இதோ, இப்படி, பைட்டோ என்று கூறிவிட்டு, அவனுக்குத் தெரியாமல் போலீசை வரவழைத்து, கள்ளனை அவர்களிடம் ஒப்படைத்து, "இதோ, இமிடேஷனை வைரம் என்று என் தலையிலே கட்டவந்தான். இந்தத் திருடன்" என்று கூறி, அவன் கொடுத்த பொட்டலத்தை அல்ல, வேறொரு பொட்டலத்தைக் காட்டினான் சேட்!

மூன்று வருடம் கடுங்காவல் கிடைத்தது, கனவான் வேடமிட்ட கள்ளனுக்கு.

சேட் திரிபுரதாஸ், மிகச் சிறந்த தர்மிஷ்டர் சீமான் கனவான் என்று பாராட்டிப் பேசி, ஜில்லா கலெக்டர், சேட் திரிபுரதாஸ், 'தர்ம சபா'வைத் திறந்து வைத்தார்.

வைபவத்திற்கு விஜயம் செய்த, கனவான்களெல்லாம் சேட் ஜியைப் பாராட்டினர்.

'பாரத் சேவா' பத்திரிகையில், பரோபகாரி சேட் திரிபுரதாஸின் படம் வெளியிடப்பட்டது. கனவான் என்ற பெயருக்கு உண்மையான இலக்கணமாக சேட்ஜீ விளங்குகிறார். என்று ஆசிரியர் குறிப்பும் எழுதியிருந்தார்.

**14-1-1956**

❄ ❄ ❄ ❄ ❄